[3rd November 1958

Sri J. MATHA GOWDER : நீலகிரி ஜில்லாவில் நடைபெறும் புங்கலூர் கம்பளி தொழிற்சாலைக்கு வேண்டிய சாமான்கள் கொடுக்கப்படவில்லை என்பது சர்க்காருக்குத் தெரியவந்திருக்கிறதா ? அப்படியானல் அதற்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTHAVATSALAM : அதைப் பற்றி என்னிடத்தில் தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் என்னிடத்தில் வந்து அந்த விவரங்களை எல்லாம் தெரிவித்தால் அதற்கு வேண்டிய கவனம் செலுத்தலாம்.

*Checking of motor vehicles at Alumpannai*

* 800 Q.—Sri M. S. SELVARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கன்னியாகுமரி ஜில்லா, ஆளும்பண்ணையில் ராஜ்யம் பிரிவினைக்கு முன் இருந்ததைப்போல போலீஸார் மோட்டார் வண்டிகளைப் பரிசோதனை செய்து அனுப்பிஞர்களா?

(ஆ) அப்படியானல் அதற்குக் காரணம் என்ன ?

The Hon. Sri V. RAMAIAH : (a) & (b) There is no place as Alumpannai in Kanyakumari district. It is presumed that the member is having in mind the village " Aramboli ". Buses and lorries stop at the police station in this village to sign a register maintained under the Madras Motor Vehicles Rules at the Police station. The police are not checking the vehicles there.

*Medical facilities under the Plantation Labourers Act*

* 801 Q.—Sri N. MARUDACHALAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தோட்டத் தொழிலாளர் சட்டப்படி 1956 முடிவுக்குள் வைத்திய வசதி செய்து கொடுக்காத தோட்ட முதலாளிகள் மீது சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுக்க உத்தேசித்துள்ளதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : தோட்டத் தொழிலாளர் சட்டம் 1956-ம் ஆண்டு ஜனவரி முதலிலிருந்துதான் அமுலுக்குக்கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஒரு சில தோட்ட முதலாளிகளைத் தவிர மற்றெல்லோரும் வைத்திய வசதி செய்வதற்கான நடவடிக்கைகளை எடுத்து வருகிறார்கள். இது ஒரு புது சட்டமாகையாலும் வைத்திய வசதிகள் செய்வதற்குப் பணம் தேவைப்படுவதாலும் வசதி செய்து கொடுக்காத தோட்ட முதலாளிகள் மீது எவ்வித நடவடிக்கையும் உடனே எடுக்காமல் இந்தச் சட்டப்படி செய்ய வேண்டிய வசதிகளைச் செய்யும் விஷயத்தில் தொழில் இலாகா உதவி புரிந்து வந்தது. அவர்களும் ஒரு மாதத்திற்குள் இந்த வசதிகளைச் செய்து கொடுக்கும்படி நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

Sri N. MARUDACHALAM : சில தோட்ட முதலாளிகள் வைத்திய வசதி செய்து கொடுக்காமல் இருக்கிறார்கள். அம்மாதிரி இடங்களில் அரசாங்கமாவது வைத்திய வசதி செய்து கொடுக்க நடவடிக்கை எடுக்குமா?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : 257 தோட்டங்களில் இதுவரையில் வைத்திய வசதி செய்வதற்காக 214 தோட்டங்கள் திட்டங்கள் சமர்ப்பித்திருக்கிறார்கள். அவை பரிசீலனையில் இருக்கின்றன. 114 தோட்டங்களுக்கு அங்கீகாரம் அளிக்கப்பட்டுவிட்டது. தோட்டக்காரர்கள் செய்ய வேண்டிய கடமையை அரசாங்கம் ஏற்றுக்கொள்வது சரியல்ல. அவர்களைக்கொண்டே சட்டப்படி என்னென்ன வசதி செய்து கொடுக்கவேண்டுமோ அவற்றைச் செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்படுகிறது.

3rd November 1958]

**Sri M. KALYANASUNDARAM** : இரண்டு வருடத்திற்கு மேலாகியும் கூட இன்னும் அந்தத் திட்டங்கள் பரிசீலனையிலிருப்பதாகச் சொல்லு கிறார்கள். தோட்டத் தொழிலாளர்களுடைய நலனைக் கருதி உடனடியாக சிறிய சிறிய தோட்ட முதலாளிகள் வைத்திய வசதி செய்து கொடுக்க முடியாவிட்டாலும் அங்கங்கே அவர்கள் ஒன்றாகச் சேர்ந்தாவது பொதுவாக ஓரிடத்தில் ஆஸ்பத்திரியை ஏற்படுத்தி வைத்திய வசதியைக் கொடுக்க நடவடிக்கை எடுக்கப்படுமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கனம் அங்கத்தினர் சொல்லுகிற யோசனை உள்பட அவ்வளவு பரிசீலனையும் செய்யப்பட்டு நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது.

*Vinayagar Temple Senpakkam*

* 802 *Q.*—**Sri S. N. ANNAMALAI** (on behalf of **Sri M. P. Sarathi**): கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வேலூர்ப் பக்கம் உள்ள சேப்பாக்கம் விநாயகர் கோவில் நிர்வாக தர்மகர்த்தா என். கோவிந்தராஜ முதலியார் நியமனம் பற்றி ஏதேனும் புகார் கிடைத்ததா ?

(ஆ) அந்த ஊர் மணியக்காரர் வழங்கியதாக ஒரு பொய் பத்திரம் தயார் செய்து பதவியைப்பெற்றதாகப் புகார் கிடைத்ததா?

(இ) அதன்பேரில் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) & (*b*) Yes, Sir.

(*c*) Disciplinary action has been taken by the Deputy Commissioner under section 45 of the Hindu Religious and Charitable Endowments Act, 1951 and the trustee, Sri N. Govindaraja Mudaliar, has been placed under suspension pending final decision.

**Sri K. VINAYAKAM** : சேன்பாக்கத்திலிருக்கும் விநாயகர் கோயில் டிரஸ்டி கோவிந்தசாமி முதலியாரை நீக்கும்போது சாரதி முதலியாரை டிரஸ்டியாக நியமிக்க அரசாங்கம் யோசிக்குமா ?

**Mr. SPEAKER** : The question is out of order.

*Primary Schools run by Forest Department.*

* 803 *Q.*—**Sri M. P. SARATHI** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) காட்டிலாகாவினால் நியமிக்கப்படும் ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் எத்தனை?

(ஆ) எந்த ஜில்லாக்களில் ? எவ்வளவு பள்ளிகள்?

(இ) அவைகளுக்கான செலவு எவ்வளவு?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) Ten.

(*b*) North Arcot district—9 Schools.
Coimbatore district—1 School.

(*c*) The approximate expenditure incurred towards the maintenance of these schools is Rs. 28,000 per annum.